# ஹஜ்ஜும் உம்ராவும் நிறைவேற்றுவதெப்படி?

செய்க் முஹம்மத் அஸ்ஸாலிஹ் அல் உதைமீன்

தமிழில்:
எஸ்.எம். மன்சூர்



المكتب التعاوني للدعوة والإرشاد وتوعية الجاليات بالسلي
ص.ب. ١٤١٩ الرياض ١١٤٣٠ هاتف ٢٤١٤٤٨٨ ـ ٢٤١٠٦١٥ ناسوخ ٢٤١١٧٣٣

تاميلي ٢ / ٦

# ஹஜ்ஜும் உம்ராவும்
## நிறைவேற்றுவதெப்படி?

செய்க் முஹம்மத் அஸ்ஸாலிஹ் அல் உதைமீன்

தமிழில்:
எஸ்.எம். மன்சூர்

வெளியீடு:

அழைப்பு, வழிகாட்டல்களுக்கான
கூட்டுறவுச் செயலகம்

அல் பதிய்யா - சனசமூகப் பிரிவு

ரியாத் - சவூதி அரேபியா.

## முன்னுரை

இஸ்லாம் வகுத்த கட்டாயக் கடமைகளுள் ஹஜ்ஜும் ஒன்று. போதிய பண வசதியும், உடல் வலுவும் உள்ள முஸ்லிம்கள் இதை நிறைவேற்றுவது கட்டாயமாகும்.

பல்வேறு மதங்கள், மனிதரிடையே காணும் இத்தகைய பயணங்களுள் இது தனித்தன்மை வாய்ந்ததே. உலகின் ஒரு கோணம் முதல் மறுகோணம் வரை வாழும் முஸ்லிம்களுள் லட்சக் கணக்கானோர் தமது இன, மொழி, தேச, நிற வேறுபாடுகளுக்கு அப்பால், அல்லாஹ்வின் அழைப்பை ஏற்று ஆர்வத்துடன் வருகின்றனர்.

குறிப்பிட்ட ஓர் இடம் வரை தத்தமது கலாசாரம் சார்ந்த உடை அணிந்து வரும் அவர்கள், அந்த இடத்தில் தூய வெள்ளை உடை அணிந்து, ஒரே மொழியில் 'லப்பைக் அல்லாஹும்ம லப்பைக்' என மொழிந்து ஆரவாரத்துடன் மக்காவினுள் நுழைகின்றனர்; தோளோடு தோள் நின்று தொழுகின்றனர்; மற்றைய கடமைகளையும் இறையுணர்வுடன் முடிந்தளவு பேணுதலுடன் செய்கின்றனர்.

இன்று நேற்று அல்ல, தொன்று தொட்டு இக்கடமை இங்கு நிறைவேற்றப்பட்டு வருவது அதன் தூய்மைக்கு ஒரு எடுத்துக் காட்டாகும்.

ரமளானின் ஆரம்பத்திலிருந்தே தூய உள உணர்வுடன் ஆரம்பமான அறப்பணி

படிப்படியாக வளர்ச்சியுற்று ஹஜ்ஜின் போது அதன் உச்சக் கட்டத்தை அடைகிறது. அக்கட்டத்தில் முழு முஸ்லிம் உலகமும் தமது பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுத்து மக்காவுக்கு அனுப்பி ஹஜ்ஜின்போது ஒன்று கூட வைப்பதன் மூலம் சர்வதேச முஸ்லிம் உறவைப் பலப்படுத்த விழைகின்றது.

உண்மையில், ஹஜ்ஜின் யதார்த்த பூர்வமான தாத்பரியங்களைப் புரிந்து கொள்ள முடிவது அதன் வழியில் பயணத்தை மேற்கொண்டு, அதை ஒழுங்குற நிறைவேற்றுவதன் மூலமாகும். அதற்கான வழிகாட்டல் நூலே இது.

செய்க் முஹம்மத் அஸ்ஸாலிஹ் அல் உதைமீன் அவர்கள் எழுதிய 'ஸிஃபத்துல் ஹஜ் வல் உம்ராஹ்' என்ற சிறு நூலின் தமிழாக்கமே இது. இப்பயணத்தில் ஈடுபடுவோருக்கு இது சிறந்ததொரு வழிகாட்டி நூலாகும். அந்த வகையில் இதனைப் பயன்படுத்தி ஈருலக பாக்கியங்கள் பெற பிரார்த்தனைப் புரிகின்றோம்.

அல்லாஹ்வுக்கே புகழனைத்தும். சாந்தியும் சலாமும் அவன் தூதர் முஹம்மத் (ஸல்) அவர்கள் மீதும் அவர்களது உற்றார், உறவினர், பின்பற்றியோர், பின்பற்றுவோர் அனைவர் மீதும் உண்டாவதாக!.

**வெளியீட்டாளர்கள்**

**25-11-1993**
*ரியாத், சவூதி அரேபியா.*

*அளவற்ற அருளாளனும் நிகரற்ற அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் திருநாமத்தால் .......*

# 1 - எண்ணம்!

அகிலத்தின் அதிபதி அல்லாஹ்வுக்கே அனைத்துப் புகழும். நபிமார்களுள் இறுதியாக வந்த முஹம்மத் (ஸல்)[1] அவர்களுக்கும், அவர்களது குடும்பத்தார், தோழர்கள், அவர்களைப் பின்பற்றுவோர் அனைவருக்கும் அல்லாஹ்வின் அன்பும் அருளும் உண்டாவதாக.

ஹஜ் மிக உயர்ந்ததொரு வழிபாடாகும்; வணக்கமாகும். அல்லாஹ் அதைக் கடமை யாக்கினான்; முஹம்மத் (ஸல்) அவர்கள் அதை நடைமுறைப் படுத்தினார்கள். அந்த வகையில் இஸ்லாத்தின் பிரதான தூண்களுள் ஒன்றாக அது மிளிர்கின்றது. இதை நிறைவேற்றுவதற்கு அவசியமான தகைமைகளைப் பெற்ற ஒருவர், நிறைவேற்றத் தவறினால், அவரது இஸ்லாமிய வாழ்வு பரிபூரணத்துவம் பெறுவது இல்லை.

இக்கடமையை நிறைவேற்றும் எம் எண்ணங்கள் தூய்மையுடையனவாக இருக்க வேண்டும். குறிப்பாக, கீழ்க்காணும் இரண்டு விடயங்கள் எம் கவனத்திற்குரியன.

1. மரணத்திற்கு பின்னுள்ள வாழ்வின் திருப்தியை நாடி அல்லாஹ்வுக்காக என்ற உணர்வுடன் மட்டும் அது நிறைவேற்றப்பட வேண்டும். அதை விடுத்து, மனிதர்கள் பார்க்க

---

*1. ஸல் - 'ஸல்லல்லாஹு அலைஹி வ ஸல்லம் என்பதன் சுருக்கம். மொழியும் போது இவ்வாறு பூரணமாக மொழிவது அவசியம்.*

வேண்டும் என்ற எண்ணத்திலோ, உலகாயத நன்மைகளை எதிர்பார்த்தோ இதை நிறைவேற்ற முற்படக் கூடாது.

2. இதை நிறைவேற்றுவதற்குரிய முன்மாதிரியை முஹம்மத் (ஸல்) அவர்களிலிருந்தே பெற வேண்டும். அவர்களது 'ஸுன்னா' எனும் முன்மாதிரியை அறியாது இதை நிறைவேற்ற முடியாது. எனவே, அதை அறிவது ஹஜ் கடமையை நிறைவேற்ற பெருந்துணையாகவே அமையும்.

## மூன்று வழிமுறைகள்

ஹஜ் கடமையை நிறைவேற்ற மூன்று வழிமுறைகள் உள்ளன. அவையாவன; 'அத்தமத்துஃ', 'அல் இஃப்ராத்', 'அல் கிரான்' என்பனவாகும்.

### அத்தமத்துஃ:

ஒருவர் துல்ஹஜ் மாதத்தில் உம்ராவை மாத்திரம் நிறைவேற்றவென 'இஹ்ராம்'[2] அணிவார். பின்னர் அவர் மக்காவுக்கு வந்தவுடன் உம்ராவின் நிமித்தம் 'தவாஃப்'[3], 'ஸஃயீ'[4] ஆகிய இரண்டையும் செய்வார். அதனையடுத்து, தனது தலைமுடியை சிரைப்பார் அல்லது கட்டையாய் கத்தரித்து விடுவார். பின்னர் துல்ஹஜ் எட்டாம் தின 'தர்வியா' அன்று, ஹஜ்ஜுக்காக மட்டும் இஹ்ராம் அணிந்து,

---

2. இஹ்ராம் - ஹஜ் அல்லது உம்ரா செய்யும் போது அணியும் உடை.

3. தவாஃப் - கஃபாவை ஏழு முறை வலம் வருவதை குறிக்கும்.

4. ஸஃயீ - ஸஃபா மர்வா இரு மலைகளுக்கிடையில் நடந்து செல்வதைக் குறிக்கும்.

அது தொடர்பான அனைத்து அம்சங்களையும் ஒழுங்குற நிறைவேற்றுவார்.

## அல் இஃப்ராத்:

ஒருவர் ஹஜ்ஜுக்கென இஹ்ராம் அணிகின்றார். அவர் மக்காவுக்கு வந்தவுடன், அவ்வரவுக்காக தவாஃப் என்பதையும் ஹஜ்ஜுக்காக ஸஃயீயையும் நிறைவேற்றுவார். அவர் இஹ்ராம் உடையைக் களைந்து விடாததன் காரணமாக தலை முடியைச் சிரைப்பதோ, கட்டையாகக் கத்தரிப்பதோ செய்யமாட்டார். அவர் ஈத்[5] தினத்தில் ஜம்ரதுல் அகபாவில்[6] கல்லெறியும் வரை இஹ்ராம் உடையுடனேயே இருப்பார். ஹஜ்ஜுக்காக தவாஃப் செய்வதை நிறைவேற்றும் வரை ஸஃயீ செய்வதைப் பிற்படுத்த அவருக்கு அனுமதி உண்டு.

## அல் கிரான்:

ஒருவர் உம்ராவுக்கும் ஹஜ்ஜுக்கும் என இஹ்ராம் அணிகின்றார். இல்லையேல் முதலில் அவர் உம்ராவுக்கென இஹ்ராம் அணிந்து, இரண்டாவதாக ஹஜ்ஜுக்காக தவாஃப் செய்வதற்கு முன்னர், ஹஜ் செய்வதற்கு நிய்யத்[7] வைக்கின்றார். இஃப்ராத் முறையில் ஹஜ் செய்வதற்கும் கிரான் முறையில் ஹஜ் செய்வதற்கும் இடையே ஒரு விடயத்தைத் தவிர வேறு எத்தகைய வேறுபாடும் இல்லை. அவ்வேறுபாடு என்னவெனில் கிரான் முறைப்படி ஹஜ் செய்பவர் மிருகமொன்றை

---

5. ஈத் - முஸ்லிம்களின் திருநாள் தினம்.

6. ஜம்ரத்துல் அகபா - மக்காவுக்கு மிக அருகில் உள்ள கல்லெறியும் இடம்.

7. நிய்யத் - எண்ணம். ஏதாவதொன்றை செய்யுமுன் ஏற்படுத்திக் கொள்ள வேண்டிய கருத்து.

குர்பான் கொடுப்பார். இஃப்ராத் முறையைப் பின்பற்றுபவர் இதனை செய்வது இல்லை. இது இவருக்குக் கடமையல்ல.

மேற்காணும் மூன்று முறைகளிலும் தமத்துஃ மிகச் சிறப்பானதே. முஹம்மத் (ஸல்) அவர்கள் இம்முறைப்படி ஹஜ்ஜை நிறைவேற்றும்படி தமது தோழர்களை ஊக்குவித்தார்கள். சிலவேளை, யாரேனும் 'கிரான்' அல்லது 'இஃப்ராத்' முறைப்படி தமது ஹஜ்ஜை நிறைவேற்ற நாடி நிய்யத் வைத்திருந்தால், அந்த நிய்யத்தை 'தமத்துஃ' முறைப்படி நிறைவேற்றவென மாற்றி வைத்துக் கொள்ளலாம். அதற்கு அனுமதி உண்டு. 'தவாஃப்', 'ஸஃயீ' இரண்டையும் நிறைவேற்றிய பின்னர்கூட இதை இவ்வாறு செய்ய முடியும்.

நபி (ஸல்) அவர்கள், தமது தோழர்களுடன் பிரியாவிடை ஹஜ் செய்த வருடம் தவாஃபும், ஸஃயீயும் செய்தார்கள். அப்பொழுது, குர்பான் கொடுப்பதற்குரிய மிருகத்தைக் கொண்டுவராதவர்கள் தமது ஹஜ்ஜுக்கான நிய்யத்தை உம்ராவுக்குரியதாக மாற்றி, தமது தலைமுடியைக் கத்தரிப்பதுடன், ஹஜ் செய்யும் வரை இஹ்ராமை கைவிட்டிருக்கும்படி கட்டளையிட்டார்கள்.

மேலும், "நானும் குர்பான் கொடுப்பதற்குரிய மிருகத்தைக் கொண்டு வராவிட்டால், உங்களுக்குக் கட்டளையிட்டபடியே நடந்து கொண்டிருப்பேன்" எனவும் நபி (ஸல்) அவர்கள் நவின்றார்கள்.

# 2 - உம்ரா!

உம்ரா செய்யும் ஒருவர் சுத்தமாக இருக்க நாடினால், வசதி இருப்பின், உடலுறவு கொண்டபின் குளிப்பதுபோல் குளித்துக் கொள்ளலாம். பின்னர், தனது தலையிலும் தாடியிலும் சிறந்த நறுமணங்கள் பூசிக் கொள்ள வேண்டும். இஹ்ராம் அணிந்ததன் பின்பு அவற்றின் சுகந்தம் இருப்பது தவறாகாது.

இஹ்ராம் அணிவதற்கென குளிப்பது ஆண் பெண் அனைவரும் பின்பற்ற வேண்டிய ஸுன்னா [8] வாகும். மாதவிடாய், பிள்ளை பிறந்ததன் காரணமாக இரத்தம் வெளியேறுதல் என்பனவற்றிற்கு ஆளான பெண்கள் கூட குளிப்பது ஸுன்னா சார்ந்த செயலே. அவ்வாறு குளித்த பின் மேற்குறித்த இரு நிலைக்கு ஆளான பெண்களைத் தவிர மற்றவர்கள், அது கட்டாயத் தொழுகைக்குரிய வேளையாயின் அதை நிறைவேற்ற வேண்டும்; இல்லையாயின் வுளூஉ [9] செய்து இரண்டு ரக்அத் [10] சுன்னத்தான தொழுகை [11] நிறைவேற்ற வேண்டும்.

---

*8. ஸுன்னா - நபி(ஸல்) அவர்களின் முன்மாதிரி வாழ்வுக்கு இவ்வாறு கூறப்படுகின்றது.*

*9. வுளூஉ - தொழுகைக்காக செய்யப்படும் சுத்தம்.*

*10. ரக்அத் - தொழுகையின் ஓர் அங்கம்.*

*11. சுன்னத்தான தொழுகை - கட்டாயமல்லாத தொழுகை.*

இத் தொழுகையை நிறைவேற்றி முடிந்தபின் அவர் 'லெப்பைக்க உம்ரத்தன்'[12] என நாவால் மொழிந்து நிய்யத் வைக்க வேண்டும். இதைத் தொடர்ந்து அடிக்கடி கீழ்க்காணும் வாக்கியங்களை சப்தமிட்டு மொழிதல் வேண்டும். ஆண்கள் இவற்றை சப்தமிட்டு மொழியும் அதேவேளை, பெண்களோ தனது பக்கத்தில் இருக்கும் ஒருவருக்கு மட்டும் கேட்கக் கூடியதாக இதை மொழிய வேண்டும். இதற்கு அரபு மொழியில் 'தல்பியாஹ்' எனக் கூறப்படும்.

لَبَّيْكَ اللَّهُمَّ لَبَّيْكَ، لَبَّيْكَ لَا شَرِيكَ
لَكَ لَبَّيْكَ ، إِنَّ الْحَمْدَ وَالنِّعْمَةَ لَكَ
وَالْمُلْكَ لَا شَرِيكَ لَكَ

***லெ(b)ப்(b)பைக் அல்லாஹு-ம்ம லெ(b)ப்(b)பைக் லெ(b)ப்(b)பைக் லா ஷரீக்கலக்க லெ(b)ப்(b)பைக் இன்னல் ஹம்த்(dh)த வன்னிஃமத்த லக்கவல்முல்க் லா ஷரீக்கலக்.***

***கருத்து:***

''நான் வந்துவிட்டேன்; யா அல்லாஹ்! நான் வந்து விட்டேன். நான் வந்து விட்டேன். உனக்கு இணையாக எவரும் இல்லை. நான் வந்து

***12. 'லெப்பைக்க உம்ரத்தன்' - கருத்து: 'நான் உம்ராவை நிறைவேற்ற வந்துள்ளேன்'***

விட்டேன். நிச்சயமாக அனைத்துப் புகழும், ஆட்சியும் அதிகாரமும் உனக்கு மட்டுமே உரித்து. (மீண்டும் கூறுகிறேன்) உனக்கு இணை எவரும் இல்லை.''

இஹ்ராமில் இருக்கும் ஒருவர் சந்தர்ப்பம் கிடைக்கும் போதெல்லாம் - குறிப்பாக காலம், இடம் என்பன மாறும்போது தல்பியாஹ் மொழிவது அவசியம். உதாரணமாக, ஒருவர் மேடு பள்ளம் ஏறி இறங்கும்போதும், இரவு பகல் மாறிவரும் போதும் தல்பியாஹ் மொழிவதைக் குறிப்பிடலாம். அவ்வேளைகளில் அல்லாஹ்வின் திருப்தியையும் சுவனத்தையும் வேண்டி பிரார்த்தனை புரிய வேண்டும். மேலும், அல்லாஹ்வின் அன்பின் ஊடாக நரக நெருப்பிலிருந்து தன்னைப் பாதுகாக்கும் படியும் பிரார்த்தனை புரிய வேண்டும்.

உம்ராவுக்காக வரும் ஒருவர் தனது வலது காலை முன்வைத்து புனித பள்ளிவாயலுள் பிரவேசிக்க வேண்டும். அங்கு கீழ்க்கண்டவாறு அவர் பிரார்த்தனை புரிய வேண்டும்.

[بسم الله والصلاة والسلام على رسول الله، اللهم اغفر لي ذنوبي وافتح لي أبواب رحمتك، أعوذ بالله العظيم وبوجهه الكريم وبسلطانه القديم من الشيطان الرجيم].

*பிஸ்மில்லாஹ் வஸ்ஸலாத்து வஸ்ஸலாமு அலா ரஸுலில்லாஹ். அல்லாஹும்ம மஃபிர்லி (dh)துனூ(b)பி வஃப்தஹ்லீ அ(b)ப்வா(b)ப*

***ரஹ்மதிக். அஊது (b) பில்லாஹில் அலீம், வ(b) பி வஜ்ஹில் கரீம், வ சுல்தானி ஹில் க(dh) தீம் மினஷ் ஷய்தானிர் ரஜீம்.***

***கருத்து:***

''அளவற்ற அருளாளனும் நிகரற்ற அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் திருநாமத்தால்...... சாந்தியும் சமாதானமும் அல்லாஹ்வின் தூதர் மீது உண்டாவதாக. யா அல்லாஹ்! என் பாவங்களை மன்னித்து உன் கருணையின் கதவுகளை எனக்குத் திறந்து விடுவாயாக. சாபத்திற்கு ஆளான ஷைத்தானின் தீங்கிலிருந்து தப்பித்துக் கொள்ள சர்வ சக்தியும், உயர்ந்த பார்வையும், முழுமையான அதிகாரமும் படைத்த அல்லாஹ்வின் உதவியை நாடி நிற்கின்றேன்.''

இப்பிரார்த்தனையைத் தொடர்ந்து அவர் கறுப்புக் கல் அருகில் வந்து அதை கையால் தொட்டு முத்தமிட வேண்டும். அவ்வாறு செய்ய முடியாது போனால் அதன் பக்கம் திரும்பி கையைக் காட்டுவது போதுமானதே.

அவ்வமயம் அங்கிருப்போருக்கு தொல்லைத் தரும் விதத்தில் நடந்து கொள்வது கூடாது. மற்றவர்களை தள்ளிக் கொண்டு முன்னே போவதற்கோ, பலாத்காரமாக எதுவும் செய்வதற்கோ முற்படக் கூடாது.

கறுப்புக் கல்லைத் தொடும்போது அவர் இவ்வாறு கூற வேண்டும்.

بسم الله والله أكبر اللهم إيمانا بك وتصديقاً بكتابك ووفاء بعهدك واتباعاً لسنة نبيك محمد ﷺ.

***(ஊ)பிஸ் மில் லாஹி அல் லாஹு அக்(b) பர் அல் லா ஹும் ம ஈமானன்(b) பிக்க, வ தஸ்தி(dh) கன் (b) பி கிதா(b) பிக்க, வ வஃபாஅன் (b) பி அஹ்(dh) திக்க, வ இத்தி(b) பாஅன் லி சுன்னத்தி ந(b) பீக்க முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வ ஸல்லம்.***

***கருத்து:***

''அளவற்ற அருளாளனும் நிகரற்ற அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் திரு நாமத்தால்... அல்லாஹ் மிகப் பெரியவன். யா அல்லாஹ்! உன் மீது மிகுந்த பக்தியோடும், உனது வேதம் (குர்ஆன்) மீது மிகுந்த விசுவாசத்துடனும், உன் மீது அன்பும் சார்பும் உடையவனாகின்றேன். அத்துடன் முஹம்மத் (ஸல்) அவர்களது முன் மாதிரியை ஏற்று அதன் வழி நடப்பதாகவும் உறுதி மொழிகின்றேன்.''

இதன் பின்னர், அவர் தனது இடது பக்கமாக 'கஃபா'[13] இருக்கும் வகையில் தனது வலம் வருதலை ஆரம்பிக்க வேண்டும். அவர் 'ருகுனுல் யமானி'[14] யை அண்மித்ததும் அதை முத்தமிடாது,

---

*13. கஃபா - மக்காவில் அமைந்துள்ள பிரதான இடம் (பைத்துல்லாஹ்)*

*14. ருகுனுல் யமானி - யெமன் பக்கத்தை நோக்கி இருக்கும் கஃபாவின் ஒரு மூலை.*

தொட்டவராகக் கீழ்க் காணும் பிரார்த்தனையைப் புரிய வேண்டும்.

رَبَّنَآ ءَاتِنَا فِى ٱلدُّنْيَا حَسَنَةً وَفِى ٱلْأَخِرَةِ
حَسَنَةً وَقِنَا عَذَابَ ٱلنَّارِ

***ர(b) ப்(b) பனா ஆத் தினா ஃபித் துன் யா ஹஸனத்தன் வ ஃபில் ஆ(kh) கிரத்தி ஹஸனத்தன் வ கினா அ(dh) தா(b) பன்னார்.***

*(அல்குர்ஆன் 2:201)*

***கருத்து:***

''எங்கள் இறைவனே! எங்களுக்கு இந்த உலகிலும் நன்மையை அருள்வாயாக. மறு உலகிலும் நன்மையை அருள்வாயாக. மேலும், நரக வேதனையிலிருந்து எங்களை நீ காத்தருள்வாயாக!

இப்பிரார்த்தனையை புரியும் அவர் கறுப்புக் கல்லை கடந்து செல்லும் ஒவ்வொரு முறையும் 'அல்லாஹு அக்பர்' என மொழிதல் வேண்டும். இவ்வாறு கஃபாவை தவாஃப் செய்யும் அவர் தமக்குத் தேவையான பிரார்த்தனைகள் புரிவதற்கும், அல்லாஹ்வை அதிகமதிகம் 'திக்ர்' (தியானம்) செய்வதற்கும், குர்ஆன் வசனங்கள் ஓதுவதற்கும் அனுமதி உண்டு. இன்னும், தவாஃப், ஸஃயீ, ஜம்ரத்களில் கல் எறிதல் என்பனவும் அல்லாஹ்வை அதிகமதிகம் நினைப்பதற்கு, எண்ணத்தில் கொள்வதற்கு ஏற்படுத்தப்பட்ட வழிமுறைகளாகும்.

தவாஃப் செய்யும் ஓர் ஆண் செய்ய வேண்டிய இரண்டு விடயங்கள் இருக்கின்றன.

***அவையாவன:***

1. தவாஃபின் ஆரம்பத்திலிருந்து முடியும் வரை 'அல் இத்திபாஃ' வை அனுஷ்டிக்க வேண்டும். ஒருவர் தமதுடலின் மேல் பகுதியை மறைக்கும் உடைத்துண்டின் நடுப்பகுதியை அவரது வலது கையின் கீழால் கொண்டுவந்து, அதன் இரண்டு தொங்கல்களையும் இடது கையின் தோள் வரை கொண்டு வருவதை 'அல் இத்திபாஃ' எனக் கூறப்படும்.

தவாஃப் செய்து முடிந்ததும் அவ்வுடையை பழையபடி இருந்த விதமாகக் கொண்டு வர வேண்டும். ஏனெனில், இத்திபாஃ செய்ய வேண்டியது தவாஃப் செய்யும்போது மட்டுமே.

2. முதல் மூன்று வட்டத்தில் 'அல் ரம்ல்' செய்தல் வேண்டும். ஒருவர் நடக்கும் போது சிறிய அடிவைத்து மெதுவாகப் போவதை 'அல் ரம்ல்' என்று கூறப்படும். மற்ற நான்கு வட்டங்களையும் சாதாரண அடிகள் வைத்து நடக்க வேண்டும்.

இவ்வாறு கஃபாவை தவாஃப் செய்யும் ஏழு வட்டமும் முடிவுற்ற பின், அங்குள்ள 'மகாமே இப்ராஹிம்' அருகில் வந்து கீழ்க்காணும் குர்ஆன் வசனத்தை ஓத வேண்டும்.

وَٱتَّخِذُوا۟ مِن مَّقَامِ إِبْرَٰهِـۧمَ مُصَلًّى

***வத்த(kh)ஹிதூ மின் ம் மகாமி இ(b)ப்ராஹீம முஸல்லா***

(அல் குர்ஆன் 2:125)

***கருத்து:***

"மேலும், இப்ராஹிம் (வணக்கத்திற்காக நின்ற) இடத்தை நீங்கள் தொழும் இடமாக வைத்துக் கொள்ளுங்கள்."

பின்னர், அந்த 'மகாமே இப்ராஹிம்' எனும் இடத்திற்கு பின்னால், முடிந்த அளவு அருகேயிருந்து இரண்டு ரகஅத் தொழ வேண்டும். முதல் ரகஅத்தில் (சூரா ஃபாத்திஹாவுக்குப் பின்) சூரத்துல் காஃபிரூனையும், இரண்டாவது ரகஅத்தில் (சூரா ஃபாத்திஹாவுக்குப் பின்) சூரத்துல் இக்லாஸையும் ஓத வேண்டும்.

***சூரத்துல் ஃபாத்திஹா:***

بِسْمِ اللّٰهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ

اَلْحَمْدُ لِلّٰهِ رَبِّ الْعٰلَمِيْنَ ۝ الرَّحْمٰنِ الرَّحِيْمِ ۝
مٰلِكِ يَوْمِ الدِّيْنِ ۝ اِيَّاكَ نَعْبُدُ وَاِيَّاكَ نَسْتَعِيْنُ ۝
اِهْدِنَا الصِّرَاطَ الْمُسْتَقِيْمَ ۝ صِرَاطَ الَّذِيْنَ اَنْعَمْتَ عَلَيْهِمْ
غَيْرِ الْمَغْضُوْبِ عَلَيْهِمْ وَلَا الضَّآلِّيْنَ ۝

***பிஸ்மில்லா ஹிர் ரஹ்மா னிர்ரஹீம்.***

***அல்ஹம்து லில்லாஹி ர(b) ப்(b) பில் ஆலமீன். அர்ரஹ்மா னிர்ரஹீம். மாலிக்கி யவ்மித்தீன். இய்யாக்க நஃபுது வ இய்யாக்க நஸ்தஈன். இஹ்தி னஸ் ஸிராத்தல் முஸ்தக்கீம். ஸிராத்தல்லதீன அன் அம்த்த அலைஹிம் கய்ரில் மஃக்லூபி அலைஹிம் வலல்லால்லீன்.***

*(அல் குர்ஆன் - சூரா 01)*

**கருத்து:**

''அளவற்ற அருளாளனும் நிகரற்ற அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்.... எல்லாப் புகழும் அனைத்துலகிற்கும் ரப் ஆகிய அல்லாஹ்வுக்கே உரித்து. அவன் மாபெருங் கருணையாளனாகவும், தனிப்பெருங் கிருபையாளனாகவும், இறுதித் தீர்ப்பு நாளின் அதிபதியாகவும் இருக்கின்றான். உனக்கே நாங்கள் அடிபணிகின்றோம். (இபாதத் செய்கிறோம்.) மேலும், உன்னிடமே நாங்கள் உதவி கேட்கிறோம். எங்களுக்கு நீ நேரான வழியைக் காண்பித் தருள்வாயாக: (அவ்வழி) எவர்களுக்கு நீ அருள் புரிந்தாயோ அவர்களின் வழி; உன்னுடைய கோபத்துக்கு ஆளாகாத, மற்றும் நெறிதவறிப் போகாதவர்களின் வழி.''

## சூரத்துல் காஃபிரூன்:

بِسْمِ اللَّهِ الرَّحْمَٰنِ الرَّحِيمِ

قُلْ يَٰٓأَيُّهَا ٱلْكَٰفِرُونَ ﴿١﴾ لَآ أَعْبُدُ مَا تَعْبُدُونَ ﴿٢﴾
وَلَآ أَنتُمْ عَٰبِدُونَ مَآ أَعْبُدُ ﴿٣﴾ وَلَآ أَنَا۠ عَابِدٌ مَّا عَبَدتُّمْ ﴿٤﴾
وَلَآ أَنتُمْ عَٰبِدُونَ مَآ أَعْبُدُ ﴿٥﴾ لَكُمْ دِينُكُمْ وَلِىَ دِينِ ﴿٦﴾

*பிஸ்மில்லா ஹிர்ரஹ்மா னிர்ரஹீம்.*

*குல் யாஅய்யுஹல் காஃபிரூன். லா அஃபுது மா தஃபுதூன். வலா அன்த்தும் ஆபிதூன மா அஃபுது.*

**வலா அன ஆபிதும் மா அபத்தும் வலா அன்த்தும் ஆபிதூன மா அஃபுது. லகும் தீனுகும் வலியதீன்.**

*(அல் குர்ஆன் சூரா: 109)*

***கருத்து:***

''அளவற்ற அருளாளனும் நிகரற்ற அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்..... கூறிவிடுவீராக! ஓ! நிராகரிப்பவர்களே! நீங்கள் எவற்றை வணங்கு கிறீர்களோ அவற்றை நான் வணங்குவதில்லை. நான் யாரை வணங்கு கின்றேனோ அவனை நீங்கள் வணங்குபவர்கள் அல்லர். மேலும், நீங்கள் வணங்கியவற்றை நான் வணங்குபவன் அல்லன். நான் யாரை வணங்கு கின்றேனோ அவனை நீங்கள் வணங்குகின்றவர்கள் அல்லர். உங்களுக்கு உங்களுடைய மார்க்கம்; எனக்கு என்னுடைய மார்க்கம்.''

## சூரத்துல் இஃலாஸ்

بِسْمِ اللَّهِ الرَّحْمَٰنِ الرَّحِيمِ

قُلْ هُوَ اللَّهُ أَحَدٌ ﴿١﴾ اللَّهُ الصَّمَدُ ﴿٢﴾ لَمْ يَلِدْ
وَلَمْ يُولَدْ ﴿٣﴾ وَلَمْ يَكُن لَّهُ كُفُوًا أَحَدٌ ﴿٤﴾

*பிஸ்மில்லா ஹிர்ரஹ்மா னிர்ரஹீம்*

**குல் ஹுவல்லாஹு அஹத். அல்லாஹுஸ் ஸமத். லம் யலித். வலம் யூலத். வலம் யகுன்லஹு குஃபுவன் அஹத்.**

*(அல்குர்ஆன் - சூரா 112)*

***கருத்து:***

அளவற்ற அருளாளனும் நிகரற்ற அன்புடை யோனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்.. கூறுவீராக! அவன் அல்லாஹ், ஏகன், அல்லாஹ் (எவரிடத்தும்) எத்தேவையு மில்லாதவன். அனைவரும் அவனிடத்தில் தேவையுடைய வர்களே! அவன் யாருடைய சந்ததியும் இல்லை. அவனுக்கு யாரும் சந்ததி இல்லை. மேலும், அவனுக்கு நிகரானவர் எவருமே இலர்.''

மேற்காணும் முறைப்படி இரண்டு ரகஅத் தொழுதபின் முடியுமாயின் கறுப்புக் கல்லை அணுகித் தொடுவது நல்லது.

பின்னர், 'மஸாஅ' என்னும் நடையில் - ஸஃயீயில் - ஈடுபட்டு 'அஸ்ஸஃபா'[15] வுக்கு வந்தவுடன் கீழ்க்காணும் குர்ஆன் வசனத்தை ஓத வேண்டும்.

إِنَّ ٱلصَّفَا وَٱلْمَرْوَةَ مِن شَعَآئِرِ ٱللَّهِ

***இன்னஸ் ஸஃபா வல் மர்வத்த மின் ஸஆஇரில்லாஹ்***

*(அல் குர்ஆன் 2:158)*

***கருத்து:***

''நிச்சயமாக 'ஸஃபா', 'மர்வா' (என்னும் மலைகள்) அல்லாஹ்வின் அடையாளங்களில் நின்றும் உள்ளன.''

---

***15. அஸ்ஸஃபா - ஸஃயீ செய்யும் போது சந்திக்கும் ஒரு சிறிய மலை.***

இதைத் தொடர்ந்து கஃபா நன்கு தெரியும் வரை அஸ் ஸஃபாவுக்கு ஏற வேண்டும். அங்கு, கஃபாவின் பக்கம் திரும்பி இரண்டு கைகளையும் உயர்த்தி, அல்லாஹ்வைப் புகழ்வதுடன் தமக்குத் தேவையான பிரார்த்தனைகளைப் புரிய முடியும். இங்கு, முஹம்மத் (ஸல்) அவர்கள் 'லா இலாஹ இல்லல்லாஹ்' (அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை.) என்று மூன்று முறை மொழிந்ததுடன் பிரார்த்தனையில் ஈடுபட்டதால், இவரும் இவ்வாறு செய்வது ஏற்றமானதே.

அடுத்து, ஸஃபாவிலிருந்து இறங்கி பச்சை நிறக் கோடுவரை 'அல்மர்வா'[16] பக்கமாக சாதாரண அடிகள் வைத்து நடத்து செல்ல வேண்டும். குறிப்பிட்ட பச்சைக் கோட்டைக் கடப்பதுடன் நடையின் வேகத்தைக் கூட்டி அடுத்த பச்சைக் கோடுவரை அவ்வாறு வேகமாகச் செல்ல வேண்டும். அந்த பச்சைக் கோட்டை அடைந்ததும் மீண்டும் சாதாரண நடையில் மர்வாவின் பக்கமாகவே செல்ல வேண்டும். மர்வாவில் ஏறி சஃபாவில் செய்தது போல, கஃபாவின் பக்கம் திரும்பி, கைகளை உயர்த்தி, அல்லாஹ்வைப் புகழ்ந்து, தமக்குத் தேவையான பிரார்த்தனைகளைப் புரிய வேண்டும். பின்னர் அங்கிருந்து இறங்கி சஃபாவின் பக்கம் நடக்க வேண்டும். அவர் எந்த இடத்தில் சாதாரணமாகவும், எந்த இடத்தில் வேகமாகவும் நடக்க வேண்டும் என்பதை அறிந்து வைத்து நடத்தல் நன்று; பயன்மிக்கது.

---

*16. அல் மர்வா - ஸஃயீ செய்யும் போது சந்திக்கும் மற்றொரு சிறிய மலை.*

இவ்வாறு ஏழு முறை நடக்க வேண்டும். ஸஃபாவிலிருந்து மர்வா வரைச் செல்வது ஒரு முறையாகும். மீண்டும் மர்வாவில் இருந்து ஸஃபா வரைச் செல்வது ஒரு முறையாகும். இதற்கு 'ஸஃயீ' எனப்படும். இந்த விதமாக நடந்து செல்லும் பொழுது - அவசியமான பிரார்த்தனைகள் புரிதல், குர்ஆன் வசனங்கள் ஓதுதல், அல்லாஹ்வைத் 'திக்ர்' செய்தல் என்பனவற்றிற்கு அனுமதி உண்டு.

ஸஃயீயை முடித்துக் கொண்டபின் அவர் தனது தலைமுடியை சிரைக்க வேண்டும். அவ்வாறு செய்வது ஏற்றமானது. எனினும், ஹஜ் கடமையை நிறைவேற்றுவது அருகில் இருக்குமாயின், அப்பொழுது சிரைப்பதற்கு தலைமுடி சீக்கிரம் வளராது என்பதால், கட்டையாகக் கத்தரித்துக் கொள்ளலாம். பெண்கள் விரலளவு தமது தலைமுடியை கத்தரிக்க வேண்டும். இவற்றுடன் உம்ரா சார்ந்த கடமைகள் முடிந்து விடுகின்றன.

இதன் பின்னர் அவர் தமது உடைகளை மாற்றிக் கொள்ளவும், நறுமணம் பூசிக் கொள்ளவும், (திருமணம் முடித்தவராயின்) உடலுறவை வைத்துக் கொள்ளவும், இஸ்லாத்தில் அனுமதியுள்ள ஏனைய காரியங்களில் ஈடுபடவும் அனுமதியுண்டு.

# 3 - ஹஜ்!

துல்ஹஜ் மாதம் எட்டாம் தின முற்பகல், ஹஜ் செய்பவர் வசதியாயின் தான் தங்கியிருக்கும் இடத்திலேயே, உம்ராவுக்கு குளித்து சுத்தமானது போல் செய்ய வேண்டும். அதனையடுத்து, இஹ்ராம் அணிந்து 'லெப்பைக்க ஹஜ்ஜன்' என நிய்யத் வைத்து, ***"லெப்பைக் அல்லாஹும்ம லெப்பைக். லெப்பைக் லா ஷரீக்கலக்க லெப்பைக். இன்னல் ஹம்த்த வன்னிஃமத்த லக்கவல் முல்க் லா ஷரீக்கலக்"*** என்ற *தல்பியாஹ்வை மொழிய ஆரம்பிக்க வேண்டும்.*

அவருக்குத் தனது ஹஜ் கடமையை நிறைவேற்றுவதில் ஏதும் தடைகள் ஏற்படலாம் என்ற அச்சம் இருக்குமாயின், அவரது நிய்யத்தில் ஒரு நிபந்தனையை வைத்துக் கொள்ளலாம். "எவ்விடத்திலாவது என் ஹஜ் கடமையை நிறைவேற்றுவதில் ஏதும் தடைகள் ஏற்படுமாயின் அவ்விடத்திலேயே அது தொடர்பான செயல்களை நிறுத்துவேன்!" என்பதுதான் அந்த நிபந்தனையாகும். எனினும், குறிப்பிட்டவாறு ஏதும் அச்சம் ஏற்படவில்லையாயின் இந்த நிபந்தனைக்கும் அவசியம் இல்லை.

இனி, ஹஜ் செய்பவர் மினாவுக்குச் சென்றால், அங்கு லுஹர், அஷர், மஃரிப், இஷா, ஆகிய நான்கு வேளைத் தொழுகைகளையும் தொழ வேண்டும். நான்கு ரகஅத்துடைய தொழுகைகளை இரண்டு ரகஅத்தாக சுருக்கித் தொழ முடியும். எனினும்,

(லுஹரையும் அஸரையும், மஃரிபையும் இஷாவையும்) இணைத்துத் தொழ முடியாது.

அடுத்த நாள் சூரிய உதயத்துடன் அவர் அரஃபாத் மைதானத்திற்குச் செல்ல வேண்டும். அங்கு லுஹர் தொழுகை வேளையில் லுஹரையும் அஸரையும் சுருக்கி இணைத்துத் தொழ வேண்டும். அதன் பின் வசதியிருந்தால் சூரியன் மறையும் வரை நமீரா பள்ளிவாயலில் தங்குவது ஏற்றமானது. இங்கு அல்லாஹ்வை அதிகமதிகம் தியானிப்பதுடன் கிப்லா[17] வின் பக்கம் திரும்பிருந்து பூரணப் பிரார்த்தனையில் ஈடுபட வேண்டும்.

நபி (ஸல்) அவர்கள் இங்கு இவ்வாறு பிரார்த்தனை புரிந்துள்ளார்கள்.

***லா இலாஹ இல்லல்லாஹு வஹ்தஹு லாஷரீக்கலஹு லஹுல் முல்கு வ லஹுல் ஹம்து வஹுவ அலாகுல்லி ஷெய் இன் கதீர்.***

***கருத்து:***

''அல்லாஹ்வைத் தவிர (வணங்கி வழிபட) வேறு இறைவன் இல்லை. அவனுக்கு இணை எவருமில்லை. முழுமையான ஆட்சியதிகாரமும் புகழும் அவனுக்கே உரித்து. யாவற்றின் மீதும் அவனது வலிமை மிகைத்து நிற்கின்றது.'' (இப்பிரார்த்தனையையும் புரியலாம்.)

இவற்றில் ஈடுபடும்போது அவருக்குக் களைப்பு ஏற்படுமாயின் அங்குள்ள மற்றவர்களுடன் பயனுள்ள உரையாடல்களில் ஈடுபட முடியும். அல்லது நற்பண்புகளை வளர்க்கும் நூல்கள் படிக்க

---

*17. கிப்லா - முஸ்லிம்கள் தமது தொழுகையில் முன்னோக்கும் திசை.*

முடியும். இவற்றிற்கு அனுமதி உண்டு. குறிப்பாக அல்லாஹ்வின் மேன்மையை நினைவு படுத்தி, அவனது அன்பையும் வெகுமதிகளையும் பெற்றுத்தரும் காரியங்களில் ஈடுபடுவது நன்று.

இதனால் அல்லாஹ்வுடனான உறவும், அவன் மீதான எதிர்பார்ப்பும் உறுதியடைவது திண்ணம். பின்னர், அவர் மிகுந்த பணிவுணர்வுடன் அல்லாஹ்விடம் பிரார்த்தனைப் புரிவதில் ஈடுபடவேண்டும். பிரார்த்தனைகளுள் மிக ஏற்றமானதாகக் கருதப்படுவது அரஃபாத்தில் புரியும் பிரார்த்தனையாகும்.

அன்று, சூரியன் மறைவதோடு அவர் அரஃபாவிலிருந்து முஸ்தலிஃபா செல்ல வேண்டும். அங்கு, அன்றைய தின மஃரிப் இஷா தொழுகைகளையும் அடுத்த நாள் ஃபஜர் தொழுகையையும் தொழ வேண்டும். அவர் களைப்படைந்திருந்தாலோ, தண்ணீர் குறிப்பிட்ட அளவுதான் இருக்கின்றது என்ற நிலை இருந்தாலோ தனது மஃரிப் இஷா தொழுகைகளை இணைத்துத் தொழ முடியும். நள்ளிரவு வரை முஸ்தலிஃபாவுக்குப் போகக் கிடைக்காது என்ற அச்சம் இருக்குமாயின், அங்கு வரும்வரை காத்திராது தொழுகையை நிறைவேற்றிக் கொள்ள வேண்டும். ஏனெனில், நல்லிரவு வரை தொழுகையைப் பிற்படுத்த அனுமதி இல்லை. பின்னர், அவர் முஸ்தலிஃபாவில் பிரார்த்தனையில் ஈடுபட வேண்டும்; அல்லாஹ்வை தியானிக்க வேண்டும். சூரியன் உதயமாவது நெருங்கி வரும் வரை அவரது நிலை இதுவாகவே இருக்கும்.

பின்னர், அர்ரமீ[18] யில் கூடும் மக்கள் கூட்டத்தினரிடையே சென்றால் ஏற்படும் நெரிசல் போன்றவற்றை தாங்கும் சக்தி இல்லாத ஒருவர், ஜம்ரத்தில் மக்கள் கூடுவதற்கு முன், கல் எறிவதற்காக பின்னிரவில் மினாவுக்குப் போக அனுமதியுண்டு.

சூரியன் உதயமாவதற்குரிய கட்டத்தில் அவர் முஸ்தலிஃபாவிலிருந்து மினாவுக்குச் செல்ல வேண்டும். அங்கு சென்றவுடன் கீழ்க்காணும் விடயங்களில் ஈடுபட வேண்டும்.

அ) மக்காவுக்கு மிக அருகில் உள்ள ஞாபகச் சின்னமான ஜம்ரத்துல் அகபாவில் முறையாக ஏழு கற்கள் எறிய வேண்டும். ஒவ்வொரு கல்லை எறியும் போதும் 'அல்லாஹு அக்பர்' என மொழிதல் வேண்டும்.

ஆ) அவர் கொண்டு போன மிருகத்தை பலியிட வேண்டும். அதன் சிறு பகுதியை தமதுணவுக்கு எடுத்துவிட்டு எஞ்சிய பகுதியை ஏழைகளுக்குக் கொடுக்க வேண்டும். முத்தமாத்தீகளும்[19] கிரான் முறைப்படி ஹஜ் செய்பவர்களும் ஒரு மிருகத்தை பலியிடுவது (குர்பான் கொடுப்பது) கட்டாயம்.

இ) அவர் தனது தலைமுடியை சிரைப்பது அல்லது கட்டையாகக் கத்தரிப்பது அவசியம். சிரைப்பதே சிறப்பானது. பெண்கள் ஒரு விரலின் நுனி அளவுத் தலைமுடியை வெட்டுதல் வேண்டும்.

---

*18. அர் ரமி - கல்லெறிதலுக்கு இவ்வாறு கூறப்படும்.*

*19. முத்தமாத்தி - 'தமத்துஃ' முறைப்படி ஹஜ் செய்பவர்.*

இவற்றை முறையாகச் செய்வதற்கு வசதியி ருப்பின் அவ்வாறு செய்ய வேண்டும். ஆயினும், இந்த முறையை மாற்றக் கூடாது என்ற கட்டாயம் இல்லை.

இதைத் தொடர்ந்து அவர் இஹ்ராம் உடையை விட்டுவிட்டு ஏனைய உடைகளை அணிய முடியும். அதோடு, இஹ்ராம் அணிவதற்கு முன் அனுமதிக்கப் பட்டிருந்த அனைத்தும் செய்வதற்கும் அனு மதி யுண்டு. எனினும், உடலுறவு கொள்வதற்கு அனுமதி யில்லை.

பின்னர் 'தவாஃப் அல் இஃபாதா'[20] , 'ஸஃயீ' என்பவற்றுடனான ஹஜ் கடமையை நிறைவேற்ற மக்காவுக்குச் செல்ல வேண்டும். அங்கு போகுமுன் நறுமணம் பூசிக்கொள்வது நபி (ஸல்) அவர்களது சுன்னாவாகும்.

தவாஃபையும், ஸஃயீயையும் முறைப்படி நிறை வேற்றிய பின், இஹ்ராம் அணிவதற்கு முன் அனு மதியாயிருந்த எல்லாக் காரியங்களிலும் ஈடுபட முடியும். (திருமணம் செய்தவர்கள்) உடலுறவு கொள்வதற்கும் அனுமதியுண்டு.

அவர் தவாஃபையும், ஸஃயீயையும் முடித்த பின்னர் 11ஆம் 12ஆம் தினங்களின் இரவை கழிக்கவென மீண்டும் மினாவிற்கு வரவேண்டும்.

11ஆம் 12ஆம் தினங்களின் பிற்பகலில் மூன்று ஜம்ரத்[21] களிலும் கல்லெறிய வேண்டும். மக்கா வுக்கு சற்று தூரத்திலுள்ள ஜம்ரத்தில் முதலாவதாகக்

---

*20. தவாஃப் அல் இஃபாதா - ஹஜ் கடமை தொடர்பான தவாஃப். கஃபாவை சுற்றி ஏழு முறை வலம் வருதலை இது குறிக்கும்.*

*21 ஜம்ரத் - மினாவில் உள்ள நினைவுச் சின்னம்.*

கல்லெறிய ஆரம்பித்து, இரண்டாவதாக அதற்கடுத்ததிலும் இறுதியாக ஜம்ரத்துல் அகபாவிலும் அதைச் செய்ய வேண்டும். ஒவ்வொரு ஜம்ரத்திலும் ஏழு கற்கள் வீதம் எறிய வேண்டும். ஒவ்வொரு கல்லெறியும் போதும் 'அல்லாஹு அக்பர்' என மொழிய வேண்டும். முதலாவது, இரண்டாவது ஜம்ரத்களில் கல்லெறிந்து பின் கிப்லாவின் பக்கம் திரும்பிப் பிரார்த்தனை புரிய வேண்டும். இந்த இரண்டு நாட்களிலும் முற்பகலில் கல்லெறிய அனுமதி இல்லை. ஜம்ரத்கள் வரை நடந்து செல்வது ஏற்றமானது. அதோடு, ஏதேனும் மிருகமொன்றின் மீது ஏறிச் செல்வதற்கும் அனுமதியுண்டு..

ஒருவர், 12ஆம் தினம் கல்லெறிந்தபின் ஏதும் அவசரத் தேவைகள் இருப்பின், அன்று சூரியன் மறைவதற்குப் பின் மினாவிலிருந்து வெளியேறலாம். எனினும், அங்கு தங்கியிருப்பதை நீடிக்க நாடினால் அது ஏற்றமானதே. அன்று, அதாவது 13ஆம் தினம் இரவு மினாவில் இருப்பதுடன் 12 ஆம் தினத்தன்று போல் அன்றும் பிற்பகல் கல்லெறியச் செல்ல வேண்டும்.

பின்னர், அவர் தமது நாட்டை நாடிச் செல்லத் தயாரனதன் பின் 'தவாஃப் அல் வதாஉ'[22] வை நிறைவேற்றும் நோக்குடன் கஃபாவை ஏழு முறை வலம் வர வேண்டும். மாதவிடாய் அல்லது பிரசவத்தின் பின் இரத்தம் வெளியேறுதல் என்பவற்றுக்கு ஆளான பெண்கள் 'தவாஃப் அல் வதாஉ' வை நிறைவேற்ற வேண்டும் என்ற கடமை இல்லை.

22. தவாஃப் அல் வதாஉ - பிரியா விடை தவாப் - வலம் வருதலை குறிக்கும்.

# 4 -மஸ்ஜிதுந் நபவிக்குச் செல்லுதல்!

1. ஹஜ் கடமையை நிறைவேற்றச் செல்பவர்கள் அதற்கு முன்னரோ அல்லது பின்னரோ மதீனாவுக்குச் செல்வது வழக்கம். அங்கு தொழும் நோக்குடன் நபி (ஸல்) அவர்களது பள்ளிவாயலுக்கு - மஸ்ஜிதுந் நபவிக்குச் செல்வர். மக்காவின் புனித பள்ளிவாயலை அடுத்து மஸ்ஜிதுந் நபவியில் ஒரு வேளை தொழுவதானது ஏனைய இடங்களில் ஆயிரம் வேளை தொழுவதை விடவும் சிறப்பானதே.

2. ஒருவர் மஸ்ஜிதுந் நபவிக்குச் சென்றால் 'தஹிய்யத்துல் மஸ்ஜித்' [23] என்னும் தொழுகையை அல்லது தனக்குக் கடமையான தொழுகையைத் தொழ வேண்டும்.

3. பின்னர், நபி (ஸல்) அவர்களது புனித உடல் நல்லடக்கம் செய்யப்பட்டுள்ள இடத்திற்குச் செல்ல வேண்டும்.

அதன் எதிரே நின்று கீழ்க்காண்பது போல் பிரார்த்தனைப் புரிய வேண்டும்.

«السلام عليك أيها النبي ورحمة الله وبركاته

صلى الله عليك وجزاك عن أمتك خيراً».

---

*23. தஹிய்யதுல் மஸ்ஜித் - பள்ளிவாயல் ஒன்றிற்குச் சென்றால், அதன் நிமித்தம் தொழும் தொழுகை.*

***அஸ்ஸலாமு அலைக்க அய்யுஹன் னபி(b)ய்யு வரஹ்மதுல்லாஹி வ (b)பரக்காதுஹு ஸல்லல் லாஹு அலைக்க வ ஜஷாக்க அன் உம்மதிக்க (kh)ஹைரன்***

***கருத்து:***

“அஸ்ஸலாமு அலைக்கும் வரஹ்மதுல்லாஹி வபரக்காதுஹு யா ரஸூலுல்லாஹ்! அல்லாஹ் உங்களது மக்கள் பேரில் உங்களுக்கு நிறைந்த வெகுமதிகளைத் தந்தருள்வானாக!”

பின்னர், ஓரிரு அடிகள் வலது பக்கமாகச் சென்று அபூபக்கர் (ரலி) அவர்கள் நல்லடக்கம் செய்த இடத்தின் எதிரே நின்று கீழ்க் கண்டவாறு பிரார்த்தனைப் புரிய வேண்டும்.

«السلام عليك يا أبا بكر
خليفة رسول الله ﷺ ورحمة الله
وبركاته رضي الله عنك وجزاك عن
أمة محمد خيراً».

***அஸ்ஸலாமு அலைக்க யா அ(b)பா(b)பக்ர் கலீஃபத்த ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வ ஸல்லம் வ ரஹ்மதுல்லாஹி வ (b)பரக்காத்துஹு ரலியல்லாஹு அன்க வ ஜஷாக்க அன் உம்மத்தி முஹம்மதி (kh)ஹைரன்.***

***கருத்து:***

அஸ்ஸலாமு அலைக்கும் வரஹ்மதுல்லாஹி வபரக்காதுஹூ யா அபூபக்கர் (ரலி) அவர்களே! ரஸூல் (ஸல்) அவர்களின் பிரதிநிதியான உங்கள் மீது, முஹம்மத் (ஸல்) அவர்களது மக்கள் பேரில் உங்களைப் பொருந்திக் கொண்டு, உங்களுக்கு நிறைந்த வெகுமதிகளைத் தந்தருள்வானாக!''

பின்னர், இன்னும் ஓரிரு அடிகள் வலது பக்கமாகச் சென்று உமர் (ரலி) அவர்கள் நல்லடக்கம் செய்த இடத்தின் எதிரே நின்று கீழ்க்கண்டவாறு பிரார்த்தனை புரிய வேண்டும்.

«السلام عليك ياعمر أمير المؤمنين ورحمة الله وبركاته رضي الله عنك وجزاك عن أمة محمد خيراً».

***அஸ்ஸலாமு அலைக்க யா உமர அமீருல் முஃமினீன வ ரஹ்மதுல்லாஹி வ (b) பரக்காதுஹூ ரலியல்லாஹூ அன்க வ ஜஸாக்க அன் உம்மத்தி முஹம்மதி (kh) ஹய்ரன்.***

***கருத்து:***

''அஸ்ஸலாமு அலைக்கும் வரஹ்மதுல்லாஹி வபரகாதுஹூ யா உமர்! விசுவாசிகளின் தலைவரே! முஹம்மத் (ஸல்) அவர்களின் மக்கள் பேரில் உங்களை அல்லாஹ் பொருந்திக் கொண்டு,

உங்களுக்கு நிறைந்த வெகுமதிகளைத் தந்தருள் வானாக!''

4. பின்னர், நன்கு சுத்தமான நிலையில் தொழும் நோக்கத்துடன் மஸ்ஜிது குபாவுக்குச் செல்ல வேண்டும்.

5. அங்கு தொழுது முடிந்ததும், அல் பகீ [24] யில் நல்லடக்கம் செய்யப்பட்டுள்ள உஸ்மான் (ரலி) அவர்களின் அடக்கத் தளத்தின் எதிரே நின்று கீழ்க் கண்டவாறு பிரார்த்தனைப் புரிய வேண்டும்.

«السلام عليك ياعثمان أمير المؤمنين ورحمة الله وبركاته رضي الله عنك وجزاك عن أمة محمد خيراً. وسلّم على من في البقيع من المسلمين».

***அஸ்ஸலாமு அலைக்க யா உஸ்மான அமீருல் முஃமினீன வ ரஹ்மதுல்லாஹி வ (b) பரகாதுஹு ரலியல்லாஹு அன்க வ ஜஷாக்க அன் உம்மதி முஹம்மதி (kh) ஹய்ரன்***

***கருத்து:***

''அஸ்ஸலாமு அலைக்கும் வரஹ்மதுல்லாஹி வபர காதுஹு யா உஸ்மான்! விசுவாசிகளின் தலைவரே!. முஹம்மத் (ஸல்) அவர்களின் மக்கள் பேரில் உங்களை அல்லாஹ் பொருந்திக் கொண்டு, உங்க ளுக்கு நிறைந்த வெகுமதிகளைத் தந்தருள்வா னாக!.''

---

***24. அல் பகீ - மதினாவில் உள்ளதோர் இடம்.***

இந்த இடத்தில் இவ்வாறு பிரார்த்தனைப் புரிந்து முடிந்ததும் அங்கு நல்லடக்கம் செய்யப்பட்டுள்ள ஏனைய முஸ்லிம்களுக்காகவும் பிரார்த்தனை புரிய வேண்டும்.

இனி, உஹுத்[25] மலையடிவாரத்திற்குச் சென்று அங்கு நல்லடக்கம் செய்யப்பட்டுள்ள ஹம்ஸா (ரலி) அவர்கள் உட்பட அல்லாஹ்வுக்காக தன்னு யிரை அர்ப்பணித்தவர்களது அடக்கஸ்தளங்கள் எதிரே நின்று, அவர்களுக்கு ஸலாம் சொல்லி, அவர்களது பாவங்களை மன்னித்து, கருணையையும், திருப்தியையும் நல்குமாறு அல்லாஹ்விடம் பிரார்த்தனைப் புரிய வேண்டும்.

---

*25. உஹுத் - மதீனாவை அண்மித்துள்ள ஒரு மலை. இங்கு நடைபெற்ற ஒரு போருக்கும் இப் பெயர் வழங்கப்படுகின்றது.*

# 5 - அறிய வேண்டிய சில அம்சங்கள்!

ஹஜ், உம்ரா ஆகிய கடமைகளை நிறைவேற்றத் தயாராகும் முஹ்ரிம்[26]கள் கீழ்க்காணும் அம்சங்களை அறிவது அவசியம்.

1. அவர்கள் மீது கடமையான தொழுகை போன்ற, அல்லாஹ்வுக்காக நிறைவேற்ற வேண்டிய கடமைகளை உரிய வேளையில் அழகாக நிறைவேற்ற வேண்டும். (ஆண்கள் தொழுகையை கூட்டாக - ஜமாஅத்தாக - நிறைவேற்ற வேண்டும்.)

2. அல்லாஹ் 'கூடாது' என தடுத்துள்ள எல்லாச் செயல்களையும் முற்றாக விட்டுவிட வேண்டும்.

அல்லாஹ் கூறுகின்றான்:

''ஹஜ் (ஜுடைய காலம் அனைவராலும்) அறியப்பட்ட சில மாதங்களாகும். எனவே, இம்மாதங்களில் எவரேனும் ஹஜ்ஜு கடமையை நிறைவேற்ற நாடினால் ஹஜ்ஜின் போது இச்சைகளைத் தூண்டக் கூடிய சொல், செயல் மற்றும் தீவினை, சண்டை சச்சரவு ஆகியவற்றில் ஈடுபடக் கூடாது.''

*(அல் குர்ஆன் 2:197)*

---

26. முஹ்ரிம் - இஹ்ராம் அணிந்து இருப்பவர் இவ்வாறு அழைக்கப்படுவார்.

3. அவர்கள் ஏனைய முஸ்லிம் சகோதர சகோதரிகளை சொல்லாலோ அல்லது செயலாலோ வேதனைக்கு ஆளாக்கக் கூடாது.

4. இஹ்ராமின் நிபந்தனைகளை ஒழுங்காகப் பின்பற்றி நடப்பது அவசியம்.

அ) தலை முடியோ நகங்களோ விழக்கூடிய செயல்கள் செய்யக் கூடாது. எனினும் ஒரு முள் உடலில் குத்தி விட்டாலும் அல்லது அதனால் இரத்தம் வெளியேறினாலும் பிரச்சினை இல்லை.

ஆ) இஹ்ராம் அணிந்த பின்பு தமது உடல், உடைகள், உணவு போன்றவற்றில் நறுமணம் பயன்படுத்துவதோ பூசுவதோ கூடாது. வாசனை சவர்க்காரம் பாவிப்பதும் தவிர்க்க வேண்டும். இஹ்ராம் அணிவதற்கு முன் பூசிய நறுமணத்தின் சுகந்தம் இஹ்ராம் அணிந்த பின் இருப்பதில் தவறில்லை.

இ) ஆண்கள் தமது மனைவியருடன் ஒழுங்கில்லாது நடந்து கொள்வது, முத்தமிடுவது, உடலுறவு கொள்வது என்பவற்றிலிருந்து தவிர்ந்து நடந்து கொள்ள வேண்டும்.

ஈ) அவர்கள் திருமணம் முடிப்பது, மற்றொருவர் திருமணம் முடிக்க ஒரு பெண்ணைத் தெரிவு செய்வது என்பன செய்யக் கூடாது.

உ) அவர்கள் தமது கையை ஒரு பிடவைத் துண்டினால் சுற்றிக் கொள்ள அனுமதி இருந்தாலும், கையுறைகள் (Gloves) அணிவதற்கு அனுமதி இல்லை.

இவை ஆண்கள், பெண்கள் அனைவருக்கும் பொதுவானவை. கீழ்க் காண்பவை குறிப்பாக ஆண்களுக்கு மட்டும் உரியவை.

அ) அவர்கள் தங்களது தலைக்குப் படக்கூடியதாக தலை மறைப்புக்கள் எதுவும் பயன்படுத்தக் கூடாது. எனினும், நிழலைக் கருதி குடைகள், வாகனங்கள், டென்ட்கள் போன்றவை பயன்படுத்துவதில் தவறில்லை. மேலும், தமது தலையில் தமக்குரிய பொருட் பொதிகளை வைத்துக் கொண்டு போவதும் பிழையில்லை.

ஆ) அவர்கள் கமிஸ்கள், தோப்கள், தலை மறைப்புடனான காற்சட்டைகள், சப்பாத்து என்பன அணியக் கூடாது. சில வேளை, 'இஷார்' என்னும் இஹ்ராம் உடையின் கீழ்ப்பகுதியோ, செருப்புக்களோ கிடைக்காத பட்சத்தில் காற்சட்டையோ, சப்பாத்தோ பாவனைக்கு எடுத்துக் கொள்ளலாம்.

இ) அவர்கள், மேற்காணும் பொருட்களுடனான தலை மறைப்புக்கள், தொப்பி, கைநீளக் கோட், உள்ளாடை போன்றவைகளும் அணிய முடியாது.

அவர்கள் செருப்பு, மோதிரம், கண்ணாடி, ஒலி பெருக்கிச் சாதனங்கள், கைக்கடிகாரம் போன்ற கையில் கட்டுகின்ற, கழுத்தில் தொங்க விடுகின்ற, காலில் அணிகின்ற பொருட்கள் பாவனைக்கு எடுத்துக் கொள்வதற்கு அனுமதி உண்டு. சுகந்தம் இல்லாத பொருட்களைக் கொண்டு தமது உடலை சுத்தம் செய்து கொள்ளவும் முடியும். அவர்களது தலையையும் உடலையும் சொறிதலுக்கும் அனுமதி

உண்டு. (வேண்டுமென்றேயன்றி) அறியாத நிலையில் தலைமுடி விழுவதும் தவறு அல்ல. இவற்றிற்காக பரிகாரம் செய்ய வேண்டிய கட்டாய மாற்று விடயங்களும் இல்லை.

பெண்கள் புர்கா, நிகாப் போன்ற முகத்தை மூடுபவற்றை அணிய முடியாது. முகத்தை மறைக்காதிருப்பதே சுன்னாவாகும். சிலவேளை தமது உறவினர்களைத் தவிர வேறு ஆண்கள் தம்மை உற்று நோக்குவதைக் கண்டால், முகத்தை மூடலாம். இப்படியான கட்டத்தில் இஹ்ராமில் இருந்தாலோ அல்லது வேறு வகையான நிலையிலோ முகத்தை மூடுவது கட்டாயமாகும்.

அல்லாஹ்வே புகழுக்குரியவன். அவன் தான் வெற்றியையும் திருப்தியையும் தருபவன். முஹம்மத் (ஸல்) அவர்களுக்கும், அவர்களது குடும்பத்தவர்கள், தோழர்கள், அவர்களைப் பின்பற்றியோர், பின்பற்றுவோர் யாவருக்கும் அல்லாஹ்வின் அன்பும் அருளும் கிட்டுமாக.

*******

# صفة الحج والعمرة

تأليف

فضيلة الشيخ / محمد بن صالح العثيمين

تَرجَمهُ للتاميلية

شريف الدين محمد منصور

# صفة الحج والعمرة

تأليف

فضيلة الشيخ / محمد بن صالح العثيمين

ترجمه للتاميليه

شريف الدين محمد منصور




المكتب التعاوني للدعوة والإرشاد وتوعية الجاليات بالسلي

ص ب ١٤١٩ الرياض ١١٤٣٠ هاتف ٢٤١٤٤٨٨ - ٢٤١٠٦١٥ ناسوخ ٢٤١١٧٢٢


٦ / ٢ تاميلي